




வருடச் சந்தா போஸ்டேஜ் உள்பட ரூ. 4

[ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையில் மெம்பர்களாகச் சேர்ந்தவர்கள்
இதற்காகத் தனிச் சந்தா செலுத்தவேண்டா]

# ஸ்ரீராமாநுஜன்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

— 10 —

மன்னியபேரிருள் மாண்டபின் * கோவலுள் மாமலராள்
தன்னொடுமாயனைக் கண்டமை காட்டும்
பொன்னடிபோற்றும் மிராமாநுசற் கன்பு பூண்டவர்தாள்
சென்னியிற்சூடும் * திருவுடையா ரென்னுஞ் சீரியரே.



மதராஸ்
ஸத்கிரந்த பிரகாசன சபையின் வெளியீடு

கிடைக்குமிடம்: P.B. அண்ணங்கராசாரியர், க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்

10—6—1949

மதுரை ஸத்ஸம்ப்ரதாய ஸபையின் நிரந்தர அக்ராஸனரும்

"மநீஷிமான்ய" பிருதாலங்க்ருதருமான ஸ்ரீமான் உ. வே.

# ராவ்பஹாதூர். R. நரஸிம்ஹய்யங்கார் ஸ்வாமிகளின்

# ஸ்ரீமுகம். (2—6—49)

ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகை — நிர்வாஹ ஆசிரியர்க்குத் தெரிவித்துக்கொள்வது. ஸ்ரீ. உ. வே. ஆசார்யஸ்வாமிகள் பதரிகாச்ரமயாத்திரை யெழுந்தருளியிருப்பதால் தற்காலம் ஸ்வாமிகளின் விலாசம் எனக்குத் தெரியாததால் இதை உங்களுக்கு எழுதுகிறேன். ஸாத்யமானால் இந்த சிறுவிண்ணப்பத்தை அடுத்த ஸ்ரீராமாநுஜனில் பிரசுரம் செய்ய ஏற்பாடு செய்யவேணும். ஷோடசாத்யாயி புஸ்தகம் அடியேனுக்கு பத்திராதிபர் அனுப்பியுள்ளார். படித்தேன். நேராகவும் மறைவாகவும் அவர் வர்ஷித்திருக்கிற கடுஞ்சொற்களின் குவியலைப் படித்தேன், ஆராயப்புகுந்தேன். அவர் வெளியிட்ட பரந்தரஹஸ்யத்தை V. P. மூலமாகத்தருவித்து அதையும் படித்தேன். இரண்டு முகவுரைகளையும் 44-ம் பக்கம் குறிப்பையும் கவனித்தேன். இவைகளைப் பார்க்கவே அப்புஸ்தகம் தருவிக்கப்பட்டது. அடியேனுக்குத் தோன்றினது சரியோ தப்போ, அந்தக்கரண சுத்தியுடன் உலகுக்கு இதை உணர்த்துகிறேன். "கி. ஸ்ரீநிவாஸய்யங்காரவர்களால் பரிசோதிக்கப்பட்டு" என்று கண்டிருப்பதில் ஸ்ரீஸ்வாமிகளின் ஸம்பந்தத்தை அடியோடு விலக்கியது மிகவும் தப்பு. K. ஸ்ரீநிவாஸய்யங்கார் பதிப்பாசிரியர் என்ற ஸ்தானத்தில் மாத்திரமே நின்றிருக்கவேண்டும். அவர் அதிகப்படியான கியாதிகளுக்கு ஆசைப்பட்டு மிகவும் அநாவச்யகமாக பாகவதாபசாரத்தில் தலை நின்றுவிட்டார். இதைத் தெரிவிப்பதற்காக எனக்கும் வேண்டிய ஸம்பாவனைகள் செய்யவே போகிறார். அதற்காக நான் சிரமப்படமாட்டேன். உண்மையை உலகுக்குத் தெரிவிக்கவேண்டியது என்போல்வாருடைய கடமை. ஷோடசாத்யாயியுடன் குட் நோட்டீசும் வெளியிட்டிருப்பது ஓர் கூத்து என்றே சொல்லுவேன். இவருக்கு ஒரு டாமேஜாம் தெரியவில்லையே. ஸ்வாமிக்கு இவர் செய்திருக்கும் அக்ரமம் கணக்கில் அடங்காதவையே. சுவாமிகள் அவைகளில் கொஞ்சமும் கண்செலுத்தாமல் அடியேனைப் போன்ற சாதகபக்ஷிகள் எதிர்பார்க்கும் ஆசார்ய விஷயங்களுக்கு மாத்திரம் மதுரமான பதில் அமுத மொழிகளை அருளிச்செய்து ஸ்ரீ வைஷ்ணவவுலகைக் குளிரச் செய்தருளப் போகிறார்களென்று நம்பியிருக்கிறேன்.

இங்கே, உலகம் போற்றும் காரப்பங்காடு சிங்கப்பெருமாள் சுவாமி, தற்காலம் திருப்பதி சின்ன ஜீயர் பதவியை அலங்கரித்திருக்கின்ற மஹாவித்வான் ஸாது. ராமாநுஜாசார்யஸ்வாமி போன்ற பெரியார்களிடம் காலக்ஷேபம் கேட்ட மஹான்கள் பலர் உண்டு. அவர்களில் ஒருவரும் K. ஸ்ரீநிவாஸய்யங்காருடைய விஷய விசாரத்தை நம்பவில்லை. தத்வத்ரய வியாக்கியானத்திலுள்ள விசதவாக் சிகாமணிகளின் ஸ்ரீ ஸூக்தியை ஷோடசாத்யாயியில் விபரீதமாக்கி யிருப்பதற்கு வித்வான்கள் வருந்துகிறார்கள். அது ஸரிதானென்று நிரூபணம் செய்ய எந்த வித்வான் துணிந்து வெளிவருவாரோ, அதுதான் பார்க்கவேண்டும்.

அடியேன்,

R. நரஸிம்மன், (வக்கீல், மதுரை)

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 10

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாஸந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| முதல் தொகுதி | 10-6-1949<br>விரோதி-ௗ வைகாசி-மீ | 10-வது பகுதி |
|---|---|---|

## எம்பெருமானார் பெருமை

## "குணந்திகழ் கொண்டலிராமானுசன்"

இராமானுச நூற்றந்தாதியில் * உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகந்தோறும் * என்கிற பாட்டின் ஈற்றடி "குணந்திகழ் கொண்டலிராமானுசனெங் குலக் கொழுந்தே" என்றுள்ளது. இதனால் ஸ்வாமி ஒரு காளமேகமாகக் கூறப்பட்டுள்ளார். காளமேகத்திற்கும் ஸ்வாமிக்குமுள்ள உவமைப் பொருத்தங்கள் சில நிரூபிக்கப் படுகின்றனவிங்கு.

1. மேகமானது கடல் நீரைப் பருகியெழுந்து வர்ஷிக்கின்றதென்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. எம்பெருமானாராகிற மேகம் * **நிர்மத்ய ச்ருதிஸாகராத்** * என்கிற ப்ரமாணத்தில் ஸாகரமாகச் சொல்லப்பட்ட வடமொழி வேதத்தையும், * **நமாம்யஹம் த்ராவிடவேதஸாகரம்** * என்கிற ப்ரமாணத்தில் ஸாகரமாகச் சொல்லப்பட்ட தென்மொழி வேதத்தையும் அவகாஹித்து அவ்வுபய வேதார்த்தங்களாகிற தீர்த்தங்களை வர்ஷித்தபடி.

2. காளமேகமானது, * மேகங்களோவுரையீர், திருமால் திருமேனியொக்கும் யோகங்களுங்களுக்கு எவ்வாறு பெற்றீர் * என்கிற திருவிருத்தப் பாசுரப்படிக்கும் * கண்ணன்பால் நன்னிறங்கொள் கார் * என்கிற பெரிய திருவந்தாதிப் பாசுரப்படிக்கும் திருமாலின் திருமேனியோடொத்த நிறத்தையுடைத்தாயிருக்கும்; ஆதிசேஷாவதாரபூதரான ஸ்வாமியின் திருமேனி பால்போன்றதாயிருக்கச்செய்தேயும் * க்ஷீராம்போதேர் ஜடரமபிதோ தேஹபாஸாம் ப்ரரோஹை: காலோந்மீலத் குவலயதளாத்வைத மாபாதயந்தம் * (சம்பூராமாயணம்) என்று போஜன் சொன்னபடியும், * அபி பணிபதிபாவாத் சுப்ரம் அந்தச் சயாலோர் மரதகஸுகுமாரை: ரங்கபர்த்துர் மயூகை:, ஸகலஜலதிபாநச்யாமஜீமூதஜைத்ரம் புலகயதி விமாநம் * (ஸ்ரீரங்கராஜஸ்தவே) என்று பட்டர் அருளிச்செய்தபடியும் கார்முகில்வண்ணனை கண்ணை இடைவீடின்றி உள்ளேகொண்டிருக்கையாலே அந்தக் கரிய திருமேனியின் நிழலீட்டாலே (எம்பெருமானாருடைய திருமேனியும்) கார்முகில்வண்ணமாகவே காணப்படுமென்றுணர்க.

3. மேகமானது ஸகல தேசங்களிலுமுள்ள ஸகல ப்ராணிகளையும் ஸம்ரக்ஷிக்கக் கடமைப்பட்டதாகையாலே * மேகங்களோ!........உயிரளிப்பான் மாகங்களெல்லாந்திரிந்து நன்னீர்கள் சுமந்து * என்று திருவிருத்தத்திலருளிச்செய்தபடியே ஆகாசப்பரப்பெங்கும் ஸஞ்சரிக்கும்; ஸ்வாமிதாமும் ஸகல தேசங்களிலுமுள்ள ஸகலாத்மாக்களையும் ஸம்ரக்ஷிக்க வேண்டி * **ஸ்ரீரங்கம் கரிசைலமஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலௌ ஸ்ரீகூர்மம் புருஷோத்தமஞ்ச பதரீநாராயணம் நைமிசம், ஸ்ரீமத் த்வாரவதீ ப்ரயாக மதுராயோத்யா கயா புஷ்கரம் ஸாலக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முநி:*** என்கிறபடியே தென்னாட்டிலும் வடநாட்டிலுமுள்ள ஸகல திவ்யதேச திவ்ய க்ஷேத்ரங்களிலும் ஸஞ்சரித்து ஸ்ரீஸூக்தி அம்ருதவர்ஷங்களினால் ஸகலப்ராணிஸஸ்யங்களையும் செழித்தோங்கி வளரச்செய்தருளினர்.

4 கடலிலுள்ள நீரானது நம்மால் ஸாக்ஷாத்தாகக் கொள்ளப்படுமாயின் க்ஷாரஜலமாகையாலே ஒன்றுக்குமுதவாததாயிருக்கும்; அது தானே மேகம்வாயிலாக வருமாயின் பரம போக்யமாயிருக்கும். ஆகவே, மேகமானது அபோக்யமான நீரையும் பரம போக்யமாக்கித்தருமது என்பது தேறிற்று. அதுபோல சாஸ்த்ரங்களாகிற கடல்களிலுள்ள அர்த்தங்களை [வேதார்த்தங்களை] நாம் ஸாக்ஷாத்தாக ஸ்வீகரிக்கப் பார்த்தோமானால் அவை நமக்கு மதுரமாயிருக்கமாட்டா; அவற்றையே நாம் வேதார்த்த ஸங்க்ரஹம் ஸ்ரீபாஷ்யம் முதலிய ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திவாயிலாகக் கொள்வோமாயின் அவை பரம போக்யமாயிருக்கும்படியைக் காணாநின்றோம். ஆகவே, க்ஷாரஜலம் போன்ற சாஸ்த்ரார்த்தங்களைப் பரமமதுரமாக்கியளிக்கும் விலக்ஷண மேகம் நம்ஸ்வாமி என்றதாயிற்று.

5. மேகமானது ஒருவருடையவோ சிலருடையவோ வேண்டுகோளினாலல்லாமல் இயல்பாகவே உலகுக்கு உதவிசெய்யுமது. அதுபோல எம்பெருமானார் அநுவ்ருத்திப்ரஸந்நாசார்யர்களென்னப்பட்ட மற்ற ஆசாரியர்களைப்போலல்லாமல் **க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்ய**ரென்று அஸாதாரணமான விருதைப்பெற்றவராய், * ஓராண்வழியாயுபதேசித்தார் முன்னோர், ஏராரெதிராசரின்னருளால்—பாருலகில், ஆசையுடையோர்க்கெல்லாமாரியர்காள் கூறுமென்று பேசி வரம்பறுத்தார் பின் * (உபதேசரத்தினமாலை) என்று மணவாள மாமுனிகளருளிச்செய்யும்படியாக அபேக்ஷாநிரபேக்ஷமாகவே ஸம்ஸாரி சேதநஸமுஜ்ஜீவனத்தில் ஊற்றமுடையவர் என்பது உணரத்தக்கது.

6. ஏரி குளம் குட்டைகளில் தீர்த்தம் எவ்வளவு நிரம்பியிருந்தாலும் சாதகபக்ஷிகளானவை அங்கு வாய் வைக்கமாட்டா; ஸாக்ஷாத்தாக மேகத்தின் வாயினின்று வரும் நீரையே பருகி விடாய்தீரப்பெறும். அதுபோல் ஆழ்வான் ஆண்டான் எம்பார் முதலான சாதகவ்ருத்திகளான அடியார்கள் ஸ்வாமி திருவாக்கில் நின்று வெளிவருகின்ற திவ்யார்த்தங்களையே எதிர்பார்த்திருந்து அவற்றையே அநுபவித்து ஆனந்திப்பர்கள். ஸ்வாமி ஸூக்தியநுபவமே ஸகல சாஸ்த்ராநுபவமென்றிருப்பர்கள்.

7. மேகமானது கடலின் நீரைப்பருகிக் கொண்டு அந்தக் கடல் தன்னிலும் பெய்யும் படியைக் காண்கிறோம். 'நாம் கொண்டவிடத்தில் எதற்காக வர்ஷிக்க வேணு' மென்றிராமல் கொண்டவிடத்திலும் பெய்யுமது மேகம் என்றதாயிற்று. எம்பெருமானாருமப்படியே; ஸ்வாமி தாம் திருமாலையாண்டானிடத்தில் திருவாய்மொழிக்குப் பொருள் கேட்டு வந்தா

ரென்பது பிரஸித்தம். கொண்டவிடமாகிய அந்தவிடத்திலும் இந்த மேகம் பெய்தது. அதாவது, *அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து, அறியாமாமாயத் தடியேனை வைத்தாயால்*என்பது முதலான திருவாய்மொழிப் பாசுரங்களுக்கு அரியபெரிய அழகிய பொருளை ஸ்வாமி தாம் திருமாலையாண்டானுக்கே எடுத்துரைக்கும்படியானமை.

8. வயல்களுக்கு நதியிலிருந்தும் ஏரிகளிலிருந்தும் எவ்வளவு நீர் பெருகினும் "பைங்கூழ்கள் மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்" என்று குலசேகராழ்வாரருளிச் செய்தபடி மேகம் பெய்யாவிடில் பயிர் செழிப்புறாது; மழை பெய்தாலல்லாது லோக க்ஷேமம் நன்கு அமையாது; அது போல, ச்ருதி ஸ்மிருதீதிஹாஸ புராணங்களும் ஆழ்வாரருளிச் செயல்களும் ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் போன்ற ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளுமிருந்தாலும் எம்பெருமானர் ஸ்ரீஸூக்திகளினாலேயே உலகம் க்ஷேமமடைந்துள்ளது. இங்கு, *எம்பெருமானர் தரிசனமென்றே யிதற்கு, நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார், அம்புவியோர் இந்தத் தரிசனத்தை யெம்பெருமானர் வளர்த்த, அந்தச் செயலறிகைக்கா.* என்ற வுபதேச ரத்தினமாலைப்பாசுரமும் ***த்ராதம் ஸம்யக் யதீந்த்ரைரிதமகிலதம: கர்சநம் தர்சநம் ந:*** என்கிற தேசிகஸூக்தியும் ஸ்மரிக்கத்தகும்.

9. "மாமுத்த நிதி சொரியும் மாமுகில்காள்" என்று ஆண்டாளருளிச் செய்தபடியே மேகம் முத்துக்களையும் நவநிதிகளையும் வர்ஷிக்கும். ஸ்வாமியும் முத்துப் போன்ற ஸ்ரீஸூக்திகளை நவநிதிகளென்னும்படி அநுக்ரஹித்தருளினர். நிதிகள் ஒன்பதாயிருப்பதுபோல ஸ்வாமி ஸாதித்த திவ்ய க்ரந்தங்களும் ஒன்பதே; ஸ்ரீபாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்த ஸாரம், கீதாபாஷ்யம், வேதார்த்தஸங்க்ரஹம், சரணாகதிகத்யம், ஸ்ரீரங்ககத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம், நித்யம்—என்று.

10. மேகம் வர்ஷிப்பதனால் உலகங்கட்கு நன்மையாவதுபோலவே பல பொருள்களுக்குத் தீமையுண்டாவது முண்டு; * **த்வயி வர்ஷதி பர்ஜந்ய! ஸர்வே பல்லவிதா த்ருமா:, அஸ்மாகம் அர்க்கவ்ருக்ஷாணாம் பூர்வபத்ரேஷு ஸம்சய:** * என்கிற ச்லோகம் ப்ரஸித்தம். ஆண்டாளும் நாச்சியார் திருமொழியில் *நீர்காலத்து **எருக்கிலம்பழவிலைபோல்** வீழ்வேனை*. என்றருளிச் செய்தாள். எருக்கஞ்செடி முதலானவை மழையினால் அழிந்தொழியும்படியைக் காணநின்றோம்; அப்படியே எம்பெருமானராகிற மேகத்தின் ஸ்ரீஸூக்திவர்ஷங்களினால் "நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது, தென்குருகைவள்ளல் வாட்டமிலா வண்டமிழ்மறை வாழ்ந்தது" என்று பேசும்படியான வாழ்ச்சியைப் போலவே, "நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன" என்றும், "தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன், சொற்கற்ற சோம்பரும் சூனிய வாதரும், நான்மறையும் நிற்கக் குறும்பு செய் நீசரும் மாண்டனர்" என்றும், "சாருவாகமதநீறு செய்து சமணச் செடிக் கனல் கொளுத்தியே" என்றும் பேசும்படியாகப் பல புறச் சமயிகளின் அழிவையும் காணநின்றோமே. இங்ஙனே மற்றும் பல உவமைப் பொருத்தங்களும் உய்த்துணர்க.

எம்பெருமானர் திருவடிகளே சரணம்.



# அன்பர்கள் கவனிக்கவேண்டிய அறிவிப்பு

(K. திருவேங்கடாசாரியர், அட்வொகேட், சென்னை)

அன்பர்களே!, நமது ஸ்ரீராமாநுஜன், பக்தர்களும் பாகவதர்களும் மிக ஆவலோடு எதிர்பார்க்கக்கூடிய சிறந்த விஷயங்களை வெளியிடுவதற்காகத் தோன்றியுள்ளதேயல்லது அன்பர்கள் அருவருக்கக்கூடிய விஷயங்களை வெளியிடத் தோன்றியதன்று. கீழ் எட்டாவது இதழில் **ஆச்சான்பிள்ளை யஷ்டாத்யாயி** யென்கிற நூலை இதில் வெளியிட்டதானது நம்முடைய ஸம்பிரதாய தத்துவங்களில் பல அபூர்வ விஷயங்களை உலகம் தெரிந்துகொள்வதற்காகவேயாம். அதுவொரு சிறந்த ஆராய்ச்சிநூலென்பதை உலகமெல்லாம் கொண்டாடியிருக்கின்றதென்கிற விஷயம் **அஷ்டாத்யாயி யணிகலன்** என்கிற புத்தகத்தினால் யாவருமறிந்தது. அந்த ஆராய்ச்சி பிசகென்று சிலர்க்குத் தோன்றினால், நபரைக்குறித்த நிந்தைகளைச் சிறிதும் புகவிடாமல் வித்வான்களுடைய மனதைக் கவரக்கூடிய அழகிய வழியில் விஷயங்களைமாத்திரம் ஒழுங்காக வெளியிடுவது யுக்தமானது. அந்த வழியை அறவே மறந்திட்டு கர்ணகடோரமான நிந்தைகளை நிரப்பி ஸ்ரீ உ. வே. புத்தூர் வக்கீல் ஸ்வாமி **ஷோடசாத்யாயி** யென்கிற ஒரு புத்தகத்தை வெளியிட்டுள்ளாரென்பதை யாவருமறிந்திருக்கிறீர்கள்.

இந்தப் புத்தகம் வெளியிடுவதற்கு முன்னமே இது எவ்விதமாக அமையப்போகிறதென்பதைப் பெரியார்கள் வெளியிட்டேயிருந்தார்கள்; அவ்விதமாகவே இது அமைந்திருக்கின்றது. 'அஷ்டாத்யாயி யணிகலன் முடிவில் ஸ்ரீ உ. வே. திருக்கோட்டியூர் பண்டித ரங்கராமாநுஜாசார்ய ஸ்வாமியின் ஸ்ரீமுகம் வெளிவந்திருக்கின்றதன்றோ; அதில் எழுதியுள்ளதாவது—"ஷோடசாத்யாயியில் வெளிவரப்போகிற விஷயங்கள் உலகுக்கு இனிமேல் தெரியவேண்டியதில்லை; இப்போதே தெரிந்தவையே. புத்தூர் வக்கீலையங்கார் தம்முடைய வயிற்றெரிச்சல்தீர வசைமொழிகளை வாரி யிறைக்கப்போகிறார். அதற்கு ஷோடசாத்யாயியும் போராது. ஷோடசஸஹஸ்ராத்யாயியும் போராது. நபரைக் குறிக்காமலும், நிந்தையைப் பொழியாமலும் ஒரு வரியாவது அவரால் எழுத முடியுமோ?" என்று.

இதைப் பார்த்துங்கூட புத்தூர் ஸ்வாமி இந்த ஸ்ரீமுகத்தையே அந்வர்த்தமாக்கியெழுதியிருக்கின்றாரென்றால் **'ஸ்வபாவோ துரதிக்ரம:'** என்றுதான் சொல்லவேண்டும். அந்த ஸ்வாமி இன்னமும் சத்குணமாக நிந்தைகளைப் பெய்தாலும் நம்முடைய பத்ரிகையில் அதற்கு ப்ரதிசப்தம் அணுவளவும் தோன்றாது. விஷய வுண்மையை மாத்திரம் தெரிந்துகொள்ள எப்போதும் பிராமாணிகர்கள் ஆவல்கொண்டிருப்பார்களாதலால் அன்னவர்களின் ஆவலைப் பூர்த்தியாகத் தீர்க்கக் குறையேயிராது. பரந்த ரஹஸ்யம் பெரியவாச்சான் பிள்ளை யருளிச்செய்ததன்று என்கிற விஷயத்தை ஸ்ரீஸ்வாமிமாத்திரமன்று வெளியிட்டது, 60, 70 வருஷங்களுக்கு முன்பிருந்த மஹான்களும் வெளியிட்டிருக்கிறார்கள். இக்காலத்துப் பல மஹாசார்யர்களும் அதையே ஆமோதித்திருக்கிறார்கள் என்பதை உள்ளபடி ஒவ்வொருவரும் அறிந்திருக்கிறீர்கள். இதெல்லாம் பெரியவாச்சான் பிள்ளையின்மீது த்வேஷத்தினால் நடந்தவையென்று புத்தூர் ஸ்வாமி வெகு ஆக்ரஹத்தோடு எழுதுகிறார். இவரே சதுச்லோகீ வியாக்கியானத்தைப் பெரியவாச்சான் பிள்ளை யருளியதாக முதலில் பிரசுரம் செய்துவிட்டு, சமீப காலத்தில் அது தவறுதலாகப் பிரசுரம் செய்துவிட்டதென்றும், அது பெரியவாச்சான் பிள்ளை யருளியதல்லவென்றும் வெளியிட்டார். ஏன் இப்படி வெளியிட்டீரென்று பெரியார் கேட்டிருப்பதற்கு இவர் ஏதாவது பதில் தெரிவித்திருக்கிறாரா என்று பாருங்கள். பெரியவாச்சான் பிள்ளையின்மீது த்வேஷம் இவருக்குமுள்ளதென்று தானே ஸ்பஷ்டமாகிறது. இந்த வொன்றை மாத்திரம் பிராமாணிகர்கள் ஆராய்ந்தால் போதுமானது.

ஸ்ரீஸ்வாமி இப்போது பதரிகாச்ரம யாத்திரையில் எழுந்தருளியிருக்கிறார். பஞ்சவடீ க்ஷேத்ரத்திலிருந்து பரம க்ருபையோடு அருளிய அருமருந்தான வியாஸங்கள் இதில் வெளிவருகின்றன. பிராமாணிகர்கள் விஷய வுண்மையை நன்கறிந்து களிப்பார்களாக.

# ஸ்ரீபாஷ்ய ஸாரார்த்த ஸங்க்ரஹம்—அந்தரதிகரண ஸித்தாந்தம்.

## (முன்தொடர்ச்சி.)

இன்னமும் ஆதித்யமண்டலத்தினுள்ளுறையும் புருஷனைப்பற்றி அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் சொல்லிவருகையில் * ய ஆதித்யே திஷ்டந் யஸ்ய ஆதித்யச் சரீரம் ய ஆதித்யமந்தரோ யமயதி * என்றும், * யஸ் ஸர்வேஷு தேவேஷு திஷ்டந் * என்றும் சொல்லப்பட்டுள்ளது; ஆதித்யனென்கிற தேவதாவிசேஷத்தையும் சதுர்முகன் முதலான ஸகல தேவர்களையும் நியமிப்பவனாக அந்தப்புருஷனைச் சொல்லியிருக்கையாலே அவர்களிற் காட்டில் வேறுபாடு ஸ்பஷ்டமாகத் தெரிவதனால் ஆதித்யமண்டலத்தினுள்ளே யிருக்கிற புருஷன் ப்ரஸித்தனான ஆதித்யனாகவோ சதுர்முகனாகவோ ருத்ரனாகவோ, சிறந்த புண்யவிசேஷத்தினால் ஐச்வர்ய விசேஷத்தைப் பெற்ற வேறு எந்த ஜீவனாகவோ இருக்க முடியாதென்பது தேறிற்று.

ஸ்ரீபாஷ்ய ஸாரார்த்த ஸங்க்ரஹத்தில் அந்தரதிகரணம் முற்றிற்று.

## ஆகாசாதிகரணம் (8)

கீழதிகரணங்களில்—ஜகத்காரணமான வஸ்துவானது ஸகலசேதநா சேதநவிலக்ஷணமென்பது அவ்வோ லிங்கவிசேஷங்களைக் கொண்டு நிர்ணயிக்கப்பட்டது; அது அஸங்கதமென்று ஓர் ஆக்ஷேபந்தோன்ற அதைப்பரிஹரிக்க இவ்வதிகரணம் எழுகின்றது.

ஸூ. आकाशस्तल्लिङ्गात्। ஆகாசஸ் தல்லிங்காத். 1—1—23.

* பேதவ்யபதேசாச்சாந்ய: * என்கிற கீழ்ஸூத்ரத்திலிருந்து அந்ய: என்கிற பதம் வருவித்துக் கொள்வது. சாந்தோக்யோபநிஷத்தில் * ஸர்வாணி ஹ வா இமாநி பூதாநி ஆகாசாதேவ ஸமுத்பத்யந்தே * என்றவிடத்தில் ஆகாசசப்தத்தினால் சொல்லப்படுபவன், [அந்ய:] பூதாகாசத்திற் காட்டிலும் வேறுபட்டவன்; ஏனென்னில்; தல்லிங்காத்—பூதாகாசத்திற்காட்டிலும் வேறுபட்ட பரமாத்மாவுக்கு அஸாதாரணமான லிங்கம் ச்ருதமாயிருப்பதனாலே—என்பது ஸூத்ரத்தின் பொருள்.

சாந்தோக்யோபநிஷத்தில் * ஸர்வாணி ஹ வா இமாநி பூதாநி ஆகாசாதேவ ஸமுத்பத்யந்தே ஆகாசம் ப்ரத்யஸ்தம் யந்தி ஆகாசோஹ்யேவ ஏப்யோ ஜ்யாயாந் ஆகாச: பராயணம் * என்னுமிந்த வாக்யத்தினால் அங்குள்ள ஆகாசபதவாச்யமான வஸ்துவுக்கு ஸர்வபூதோத்பத்திகாரணத்வமும் ஸர்வபூதலய காரணத்வமும் ஸர்வஸ்மாத்ஜ்யேஷ்டத்வமும் பராயணத்வமும் முதலான தர்மங்கள் ஓதப்பட்டிருக்கின்றன. இதில், எல்லாவற்றிற்காட்டிலும் ஜ்யேஷ்டத்வமாவது—குணங்களினாலும் ஸ்வரூபத்தினாலும் உத்க்ருஷ்டமாயிருக்கை. பராயணத்வமாவது—சேதநர்களுக்குப் பரமப்ராப்யமாயிருக்கை. இப்படிப்பட்ட தன்மைகள் பரமாத்மாவுக்கே ஸம்பவிக்கக் கூடியவை. பூதாகாசத்திற்கு ஸம்பவிக்கமாட்டா. ஸர்வபூதங்களினுடையவும் உத்பத்திக்கும் லயத்திற்கும் காரணமாயிருக்கை, குணங்களாலும் ஸ்வரூபத்தாலும் ஸர்வபூதங்களிற்காட்டிலும் ஜ்யேஷ்டமாயிருக்கை என்னுமிவை பூதாகாசத்திற்கு ஸம்பவிக்கமாட்டாதவையேயன்றோ. அசேதநமாயும் ஹேயமாயுமிருக்கின்றவது சேதநர்களுக்குப் பரமப்ராப்ய மாவதற்கு அடியோடு ப்ரஸக்தியில்லையன்றோ.

பரமாத்மாவுக்கோவென்னில் இந்தத்தன்மைகளெல்லாம் நன்கு ஸம்பவிக்கக் கூடியவை. நாராயணோபநிஷத்தில் * நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே * இத்யாதியினால் நாராயணனுக்கு ஸர்வபூதங்களினுடையவும் உத்பத்தியைக் குறித்தும் லயத்தைக் குறித்தும் காரணத்வம் சொல்லப்பட்டிருக்கிறது. * விச்வத: பரமம் நித்யம் விச்வம் நாராயணம் ஹரிம் * இத்யாதிகளில் "விச்வத: பரமம்" என்பதனாலே எல்லாவற்றிற்காட்டிலும் எல்லா விதத்திலும் பெருமை பேசப்பட்டிருக்கிறது. * நாராயணம் மஹாஜ்ஞேயம் விச்வாத்மாநம் பராயணம் * இத்யாதிகளில் "பராயணம்" என்பதனாலே சேதநர்களுக்குப் பரமப்ராப்யத்வமும் அவனுக்கே சொல்லப்பட்டுள்ளது. ஆகவே *ஸர்வாணி ஹ வை * இத்யாதிச்ருதியில் ஆகாச சப்தத்தினால் சொல்லப்படும் வஸ்து பரமபுருஷனே யென்பது தேறுகின்றது.

இங்குப்பூர்வபக்ஷம்:—ஜகத்காரணவஸ்துவான ப்ரஹ்மம் அசேதநத்திற்காட்டிலும் வேறுபட்டதென்பது ஈக்ஷணம் முதலான லிங்கங்களினால் ஸித்திக்கிறதென்று சொல்லுவது அயுக்தம்; * யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே * இத்யாதியினால் ப்ரஹ்மத்தின்

லக்ஷணம் சொல்லப்பட்டபோது 'எதிலிருந்து இந்த பூதங்கள் உத்பத்தியடைகின்றன' என்று ஜிஜ்ஞாஸை பிறந்தவளவில், ஏதேனுமொருலிங்கத்தினுல் விசேஷநிர்ணயம்பண்ணுவதற்கு முன்னமே, அவிலம்பிதப்ரதீதி ஜநகமாய்க்கொண்டு ப்ரபலச்ருதியாயிருக்கின்ற ஆகாசச்ருதியினுல் பூதாகாசமாகிற விசேஷம் உபஸ்திதமாவதனுல் பூதங்களின் உத்பத்திகாரணமான வஸ்துவை லிங்கத்தைக் கொண்டு நிர்ணயிக்கவேண்டிய ப்ரஸக்தியேயில்லை; பூதாகாசந்தான் காரணவஸ்து என்று ச்ருதியைக்கொண்டு நிச்சயித்தவளவில் அதில் ஈக்ஷணம் முதலானவை ஸம்பவிக்கமாட்டாதேயென்று தோன்றினுல் அவற்றை அமுக்க்யமாகவும் நயிபபித்துக் கொள்ளலாம்; ஆகவே ச்ருதியை விட்டு லிங்கத்தைக் கொண்டு ஸாதிப்பது பிசகு—என்று.

இந்தப் பூர்வபக்ஷத்தின்மேல் ஸித்தாந்தம் வருமாறு ;—ச்ருதியைக்காட்டிலும் லிங்கம் துர்பலமென்றும் லிங்கத்திற்காட்டிலும் ச்ருதியே ப்ரபலமென்றுமிருந்தாலும் சிலவிடங்களில் ச்ருதியைவிட லிங்கத்திற்கு ப்ராபல்யம் ப்ராப்தமாவது முண்டு. எங்ஙனே யென்னில்; "கங்காயாம் கோஷஃ" [கங்கையில் இடைச்சேரியுள்ளது] என்றுல் கங்கையென்கிற பதத்திற்கு முக்க்யமான பொருள் கங்காப்ரவாஹம்; அதில் இடைச்சேரியிருப்பதாகச் சொல்லப்படுகிறது; இது ப்ரத்யக்ஷப்ரமாண விருத்தமாகையாலே அந்வயிக்கமாட்டாதென்று 'கங்காபதஸ்ய கங்காதீரே லக்ஷணு' என்று லக்ஷணை கொள்ளப்படவேண்டுகையாலே, அயோக்யார்த்தகமான ச்ருதியிற்காட்டிலும் அபாதிதமான ப்ரமாணத்தினுலறியப்பட்ட லிங்கத்திற்கு ப்ராபல்யம் கொள்ளவேண்டியிருக்கிற தன்றோ. ப்ரக்ருதத்தில் ஆகாச பதத்திற்கு முக்க்யார்த்தமான பூதாகாசத்தில் பரமப்ராப்யத்வமாகிற பராயணத்வம் முதலானவற்றுக்கு அந்வயம் பொருந்த மாட்டாமையினுலே ஆகாசச்ருதியின் ப்ராபல்யம் உபயோகமற்றதாகிறது. ஆகவே, கீழே விவரிக்கப்பட்ட யோக்யார்த்த ச்ருதிமூலகமான லிங்கங்களின் அந்வயோபபத்திக்காக ஆகாசபதத்தை "ஆ—ஸமந்தாத், காசதே—ப்ரகாசதே" என்கிற வ்யுத்பத்தியினுல் நாராயணனென்கிற பரப்ரஹ்மத்தைச் சொல்லுமதாகவே கொள்ளவேணும்.

ஸ்ரீபாஷ்யஸாரார்த்த ஸங்க்ரஹத்தில் ஆகாசாதி கரணம்முற்றிற்று.

## ப்ராணுதிகரணம் (9)

முன்னதிகரணத்தில் ஆகாசத்திற்குக் காரணத்வம் நிராகரிக்கப்பட்டது; இவ்வதிகரணத்தில் வாயுவுக்குக் காரணத்வம் சங்கித்துப் பரிஹரிக்கப்படுகிறது.

**अत एव प्राण:—அத ஏவ ப்ராணஃ. 1—1—24.**

முன்ஸூத்ரத்திற்போலவே இந்த ஸூத்ரத்திலும் அங்யஃ என்கிற பதம் வருவித்துக்கொள்ளப்படவேண்டும். அத ஏவ—ப்ரஸித்தம்போல் நிர்தேசமிருப்பதனுலேயே, ப்ராணஃ—ச்ருதியிலுள்ள ப்ராணசப்தத்தினுல் சொல்லப்படுபவன், அங்யஃ—ப்ராணவாயுவைக்காட்டிலும் வேறுபட்டவன் என்பது ஸூத்ரத்தின் பொருள்.

சாந்தோக்யோபநிஷத்தில் * ஸர்வாணி ஹ வா இமாநி பூதாநி ப்ராணமேவ அபிஸம்விசந்தி ப்ராணம் அப்யுஜ்ஜிஹதே ஸைஷா தேவதா ப்ரஸ்தாவமந்வாயத்தா * என்று ஓதப்பட்டுள்ளது. இமாநி ஸர்வாணி பூதாநி—இந்த ஸகல ப்ராணிகளும், ப்ராணமேவ அபிஸம்விசந்தி—ப்ராணனிடத்திலேயே லயமடைகின்றன; ப்ராணம் அப்யுஜ்ஜிஹதே—ப்ராணனிடத்தில்நின்றும் வெளிவருகின்றன என்றபடி. இங்ஙனே சொல்லுமிடத்து 'ஹ வை' என்பதனுல் இவ்வர்த்தம் ப்ரஸித்தமென்று காட்டப்படுகிறது. அந்த ப்ரஸித்தியை நாம் தெரிந்துகொள்ளவேணுமானுல் *நாராயணுத் ப்ரஹ்மா ஜாயதே* என்கிற ச்ருதியிலிருந்தே தெரிந்துகொள்ளவேண்டியதாகும். அந்த ச்ருதிவாக்யத்தில் ஸர்வ பூதங்களுக்கும் நாராயணனிடத்திலிருந்தே உத்பத்தியும் நாராயணனிடத்திலேயே லயமும் ஓதப்பட்டிருப்பதனுலே. ஆக இவ்வகையில் நாராயணனே ப்ராணபதார்த்தமென்று நிச்சயிக்கப்படுமளவில் ப்ராணபதத்திற்கு ப்ராணவாயு பரத்வம் சங்கிக்க ப்ரஸக்தியில்லை. ப்ராணபதம் பரப்ரஹ்ம பரமாக எப்படியாகுமென்னில், 'ப்ராணயதி—ஜீவயதி' என்கிற வ்யுத்பத்தியினுல்—என்று உணர்வது.

பூர்வபக்ஷம் ;—கீழ்அதிகரணத்தில் நிரூபித்தபடி ஆகாச ச்ருதியை அயோக்யார்த்தகமென்று கொண்டாலும் ப்ராணச்ருதியை அப்படி கொள்ளமுடியாது ; ஸர்வ பூதங்களி

னுடையவும் உத்பத்தி ஸ்திதிகளை ப்ராணாதீநமாகவே காண்கிறோமாகையாலே ப்ராணத்திற்குக் காரணத்வத்தைத் தெரிவிக்கும் ச்ருதியானது அயோக்யார்த்தகமல்லாமல் யோக்யார்த்தகமேயாதலால் ப்ராணவாயுவே ஜகத்காரணம்—என்று.

இதன்மேல் ஸித்தாந்தம்; * ஸர்வாணி ஹ வா இமாநி பூதாநி ப்ராணமேவ அபிஸம் விசந்தி * இத்யாதி ச்ருதியானது முக்க்ய ப்ராண விஷயமாகில் சேதநஸ்வரூபத்தின் ஸ்திதியும் முக்க்யப்ராணாதீநமாக இருக்கவேண்டி வரும்; அப்படியில்லாமையாலே ஆகாச ச்ருதிபோல் இந்த ப்ராண ச்ருதியும் யோக்யார்த்தகமன்றிக்கே அயோக்யார்த்தகமேயாகும். ஆகவே பரமாத்மபரமாகவே இந்த ச்ருதி கொள்ளத்தக்கது.

ஸ்ரீபாஷ்ய ஸாரார்த்த ஸங்க்ரஹத்தில் ப்ராணாதிகரணம் முற்றிற்று.

---

## ஜ்யோதிரதிகரணம் (10)

ஆகாசாதிகரணத்தில் பூதாகாசம் காரணமன்றென்று மறுக்கப்பட்டது. பிறகு, * ஆகாசாத் வாயு: * என்று அடுத்தபடியாக உபஸ்திதமான வாயுவுக்குக் காரணத்வமில்லையென்று மறுக்கப்பட்டது. இப்போது, * வாயோரக்நி: * என்று அதற்கடுத்தபடியாக உபஸ்திதமான தேஜஸ்ஸுக்குக் காரணத்வம் சங்கித்து மறுக்கப்படுகிறது.

**ज्योतिश्चरणाभिधानात्— ஜ்யோதிச் சரணாபிதாநாத். 1—1—25.**

சாந்தோக்யோபநிஷத்தில் காயத்ரீவித்யா ப்ரகரணத்தில் * அத யதத: பரோ திவோ ஜ்யோதிர் தீப்யதே * என்றவிடத்து ஜ்யோதிச் சப்தத்தினால் குறிக்கப்பட்ட வஸ்துவானது பௌதிகமான ஜ்யோதிஸ்ஸைக் காட்டிலும் வேறுபட்டது; அதற்குப் பாதமுடைமை சொல்லப்பட்டிருத்தலால். என்று ஸூத்ரத்தின் பொருள்.

சாந்தோக்யத்தில் * அத யதத: பரோ திவோ ஜ்யோதிர் தீப்யதே விச்வத: ப்ருஷ்டேஷு ஸர்வத: ப்ருஷ்டேஷு அநுத்தமேஷு உத்தமேஷு லோகேஷு இதம் வவ தத் யதிதம் அஸ்மிந் அந்த: புருஷே ஜ்யோதி: * என்கிற விடத்தில் உயர்வறவுயர்ந்தவொளியுள்ளதாக வோதப்பட்ட ஜ்யோதிஸ்ஸுக்கு * பாதோஸ்ய ஸர்வா பூதாநி த்ரிபாதஸ்யாம்ருதம் திவி * என்கிற முன்வாக்யத்தில் ஸர்வபூதங்களையும் பாதமாகவுடைமை, த்யுலோக ஸம்பந்தம், அவ்விடத்தில் மூன்று பாதங்களுடைமை ஆகிய இவை சொல்லப்பட்டிருக்கின்றன. இதனால் * பாதோஸ்ய விச்வா பூதாநி, த்ரிபாதஸ்யாம்ருதம் திவி * என்கிற புருஷ ஸூக்த மந்த்ரத்தின் பொருள் நினைப்பூட்டப்படுகிறது. ஆகையால் புருஷ ஸூக்தத்தில் அங்கு ப்ரஸ்தாவிக்கப்பட்டு உடனே * வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம், ஆதித்யவர்ணம் தமஸஸ் து பாரே * என்று ஆதித்யன்போல் மிகச் சிறந்த வொளியுள்ளவனாக ஓதப்பட்ட பரமபுருஷனே இந்த ஜ்யோதிச் சப்தவாச்யனாக நிஷ்கர்ஷிக்கப்படுகிறது. சிறந்த சோதியுருவான திவ்யமங்கள விக்ரஹமுடைமையாலே பரமபுருஷனை ஜ்யோதிச் சப்த வாச்யனாகக் கொள்வது பொருந்தும்.

இங்குப் பூர்வபக்ஷம்;—சாந்தோக்யத்தில் * அத யதத: பரோ திவோ ஜ்யோதிர் தீப்யதே * இத்யாதி வாக்யத்தில் சிறந்த வொளி யுள்ளதாக வோதப்பட்ட ஜ்யோதிஸ்ஸானது ஆதித்யாதி ஜ்யோதிஸ்ஸேயாகும்; "யத் அத: பரோ திவோ ஜ்யோதி:" என்று (யச்சப்தத்தினால்) ப்ரஸித்தவந்நிர்தேசம் பண்ணியிருப்பதனால். ஆதித்யாதிதேஜஸ்ஸுக்கேயன்றோ அப்படிப்பட்ட ப்ரஸித்தியுள்ளது. "இதம் வாவ தத் யதிதம் அஸ்மிந் அந்த: புருஷே ஜ்யோதி:" என்று ஜாடராக்நியோடு அதற்கு ஐக்யம் கூறியிருப்பதும் தேஜஸ்ஸென்கிற ஆகாரத்தாலே ஏகஜாதீயமாகிறபடியாலே ஆதித்யாதி தேஜஸ்ஸுக்கேதான் பொருந்தும். அப்படிப்பட்ட ஜ்யோதிஸ்ஸுக்கு மிகச்சிறந்த வொளியுடைமை சொல்லியிருக்கையாலே அதுவே ஜகத்காரணமென்பது ஸித்திக்கிறது. ஏனென்னில்; முண்டகோபநிஷத்தில் * யத் பூதயோநிம் பரிபச்யந்தி தீரா: * என்று பூத யோநியான அக்ஷரத்தை ப்ரஸ்தாவித்து, அதற்கு * ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோயமக்நி:, தமேவ பாந்தமநுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி * என்று மிகச் சிறந்த வொளியுடைமை சொல்லியிருக்கையாலே ஜகத்காரணத்வமுள்ள விடத்தில் அப்படிப்பட்ட வொளியுடைமை நியதமென்பது தெரிகின்றதன்றோ. ஆகவே ஆதித்யாதி ஜ்யோதிஸ்ஸே ஜகத்காரணமாகக் கடவது—என்று. (தொடரும்.)

# ஒரு மஹநீயருடைய ஸ்ரீமுகம்.

துமுக்கூர் ஜில்லா, குணிகல் தாலூகா, அம்ருதூர் ஜமீன்தார்,

ந்யாய வேதாந்த மஹாவித்வான்

ஸ்ரீமத். உ. வே. A. S. ராமாநுஜாசார்ய ஸ்வாமி

அநுக்ரஹித்த ஸ்ரீமுகம்.

(5—6—'49)

ஸ்ரீமத்வேதமார்க்கேத்யாதிப்படி யெழுந்தருளியிருக்கும் K. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி திருவடித்தாமரைகளில் அடியேன் அம்ருதூர் (ஜமீன்தார்) A. S. ராமாநுஜதாஸன் அனந்தமான தெண்டனிட்டுச் செய்யும் விண்ணப்பம். உபயகுசலோபரி. ஸ்வாமியநுக்ரஹித்த ஷோடசாத்யாயியை அடியேன் லபிக்கப்பெற்று சிரஸாவஹித்து ஆதியோடந்தமாக ஸேவித்து இந்த விண்ணப்பமெழுதிக்கொள்ளுகிறேன். ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமியினுடைய அஷ்டாத்யாயியையும் அடியேன் சிலநாள்களுக்கு முன்பு ஸேவித்திருக்கிறேன். தேவரீர்களுக்கு அப்போதே ஒருவிண்ணப்பமெழுத உத்தேசித்தேன். ஆனாலும் ஏதோ தாபத்ரயவசாத் நினைத்தபடி யெழுதமுடியாமல் போச்சுது. இப்போதும் எழுதாமலிருக்க முடியாமல் ஸவிநயமாக விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன்.

ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் ஜனித்த ஒவ்வொருவ்யக்தியும் ஸ்ரீகாஞ்சீஸ்வாமியிடத்தில் க்ருதஜ்ஞதையும் பக்தியும் வஹியாதிருக்க முடியாதாகையாலே அடியேன் அந்த ஸ்வாமியிடத்தில் ப்ரதிபத்தியுடையவன் என்பதை முன்னே விஜ்ஞாபித்துக்கொள்ளுகிறேன். ஆனால் யுக்தாயுக்தங்களை நிரூபியாமல் மூடபக்திவைக்கிறவர்களின் கோஷ்டியில் அடியேன் சேர்ந்தவனில்லை. அந்தஸ்வாமியின் க்ரந்தங்களை யெல்லாம் அடியேன் 30—35 வருஷ காலமாக அநுபவித்துவருகிறவன். சிற்சில விஷயங்களில் அடியேனுக்கு அபிப்ராய பேதம் தோன்றுவதுண்டு. அதை ஸமயங்களில் ஸ்வாமிக்கு விநயமாகத் தெரிவிப்பதுமுண்டு.

காஞ்சீபுரத்தில் சதுச்சாஸ்த்ரவித்வானையும் ஸுப்ரஸித்தராயு மெழுந்தருளியிருந்த **குன்னபாக்கம் சீமாச்சார்ஸ்வாமி** யென்பவர் ஸன்னிதியில் அடியேன் ந்யாயசாஸ்த்ரம் வாசித்துக்கொண்டும் ஸ்ரீபாஷ்யம் ஸேவித்துக்கொண்டு மிருந்த காலத்திலே (அடியேனுக்கிப்போது வயது எண்பதுக்கு ஸமீபித்திருக்கிறது. 50 வருஷங்களுக்கு முற்பட்ட ஸங்கதியை அடியேனிப்போது விஜ்ஞாபிக்கிறேன்.) ஸ்ரீ அண்ணா ஸ்வாமிக்கு பூர்வாச்ரமமாதாமஹரான ஸ்ரீமத் அழகிய மணவாளஜீயர் ஸ்வாமி மடத்தில் ப்ரஸாதஸ்வீகாரம் செய்துகொண்டிருந்தேன். அப்போது அந்த ஜீயர்ஸ்வாமி மைஸூர் ப்ராந்தம் சிஷ்யயாத்ரையாகப் புறப்பட்டெழுந்தருளி வழியில் பள்ளாரியில் சாதுர்மாஸ்ய ஸங்கல்பத்துக் கெழுந்தருளியிருந்த காலத்தில் அவ்விடத்தில்தான் பரந்த ரஹஸ்யத்தை ப்ரப்ரதமமாக தெலுங்கெழுத்தில் முத்ரணம் செய்வித்து அந்த ப்ரதிகளையெல்லாம் அடியேன் பேருக்குத்தான் மடத்திற்கு அனுப்பினார். அந்த ஸ்வாமியினுடைய நியமனப்படி சில ப்ரதிகளை அடியேன் குன்னப்பாக்கம் ஸ்வாமி ஸன்னிதியில் ஸமர்ப்பித்தபோது அந்தஸ்வாமி கடாக்ஷித்து இந்தக்ரந்தம் பெரியவாச்சான் பிள்ளை ஸாதித்ததன்று, இது அவருடைய ரசனையேயன்று என்பதைப் பல ஹேதுக்களுடன் ஸாதிச்சாச்சுது. பிறகு அதைப்பற்றின ப்ரசம்ஸை நேரவில்லை. இப்போது இரண்டுதரப்பினும் வெளிவந்திருக்கிற வாதப்ரதிவாதங்களை யெல்லாம் பூராவும் கவனித்தேன். தேவரீர், விஷயங்களின்மேலேயே போவதைவிட்டு ஸ்ரீஸ்வாமியின்மேல்

வீணான அவதூறுவார்த்தைகளை அதிகமாக எழுதியிருக்கிறதே, இது ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு கொஞ்சமும் ஸஹ்யமாயிருக்காதே. பெரிய வக்கீலாக ப்ரஸித்திபெற்றிருக்கிற தேவரீர் இவ்வளவு கேவலமான மார்க்கத்தில் எழுதுவது நன்றாயில்லையே.

ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமியால் உலகுக்கு எவ்வளவு உபகாரம் நேர்ந்திருக்கிறது, தர்சனத்திற்கு எவ்வளவு மஹோபகாரங்களை அவர் செய்திருக்கிறார், உலகத்தின் இருள்களை அவர் எவ்வளவு போக்கடித்திருக்கிறார் என்பதெல்லாம் அடியேன் போல்வாரைவிட தேவரீருக்கு அதிகமாகத் தெரிந்திருந்தும் இப்படி அநாவச்யமாக நிந்தைகளை வர்ஷித்து எழுதியிருப்பது நன்றாயில்லையே. உலகுக்கு ஸத்யமான விஷயத்தைத் தெரிவிக்கவேணுமானால் நபரைக் குறிக்காமலும் ஒரு தூஷணச் சொல்லையும் சேர்க்காமலும் யதார்த்தமான விஷயத்தை மாத்திரம் எழுதமுடியாதா? வைதிகர்களுக்கு இந்த வழி தெரியாவிட்டாலும் லௌகிகத்தில் தேறின தேவரீர்களுக்கும் இந்தவழி தெரியவில்லை யென்றால் இது ஆச்சர்யமாயிருக்கிறதே. ஸ்ரீவைஷ்ணவ ப்ருந்தமெல்லாம் திருவுள்ளம் கன்றும்படி இப்படி யெழுதினத்தால் அந்த ஸ்வாமிக்கு யாதொரு ஹாநியுமில்லை. தேவரீருக்குத் தான் அத்ராமுத்ர மஹத்தான ஹாநி ஏற்படுகிறதென்று யாவரும் வருந்துவர்கள்.

விஷயநிரூபணத்தில் வெற்றிபெற நினைக்கவேணுமே யொழிய நிந்தாநைபுண்யத்தில் வெற்றிபெற நினைக்கலாமோ தேவரீர்கள். இந்த ப்ரவ்ருத்தி அடியோடு நன்றாயில்லை. மிகவும் சோசநீய மென்று அடியேன் மாத்திரமேயன்று, உலக மெல்லாம் சொல்லும்.

தத்வத்ரய வியாக்கியானத்தில் ஓரேயிடத்தில் ஆச்சான்பிள்ளை யென்று பலமுறையும் பெரியவாச்சான் பிள்ளை யென்று ஒருமுறையும் ஸாதித்திருப்பது ஒரு வ்யக்தியைத்தான் என்று தேவரீர் எழுதியிருப்பதை ஸதாசார்ய ஸன்னிதியில் பரிசர்யை பண்ணி காலக்ஷேபம் செய்த ஒருவராவது ஒப்புக்கொள்ள முடியுமா? தேவரீரே எழுதிக்கொண்டிருந்தால் என்னபயன்? ஸம்ப்ரதாய நிர்வாஹகர்களாய் ப்ரஸித்தர்களான வ்யபதிஷ்டர்களில் ஒருவருடைய ஸம்மதியையாவது வாங்கி தேவரீர் வெளியிட முடியுமா? அப்படி வெளியிட்டாலன்றோ விஷயத்திற்கு ஏற்றமுண்டாகும்.

இந்த விண்ணப்பத்தை ஒரு அக்ஷரம் விடாமல் தேவரீருடைய பத்ரிகையில் அச்சிடவேணுமென்றும் பிரார்த்திக்கிறேன். முடியாவிட்டால் அதை அடியேனுக்கு உடனே தெரிவிக்கவேணும். (இந்த விண்ணப்பம் தேவரீருக்கு ரிஜிஸ்டர்ட் தபால் மூலமாக அனுப்பப்படுகிறது.)

இதன் காபி யொன்று ஸத்க்ரந்த ப்ரகாசநஸபா ஸெக்ரிடெரிகளுக்கும் அனுப்பியிருக்கிறது.

இப்படிக்கு,

**A. S. ராமாநுஜாசார்யர்**

(அம்ருதூர்—ஜமீன்தார்.)

## ஷை ஸ்வாமியினுடைய இரண்டாவது ஸ்ரீமுகம்.

**(7-6-49)**

ஸ்ரீமத் உவே. புத்தூர் K. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி ஸந்நிதியில் அடியேன் அனந்தமான தெண்டனிட்ட விண்ணப்பம். அடியேனுடைய ரிஜிஸ்டர்ட் லெட்டர் தேவரீருக்குக் கிடைத்திருக்கும். அந்த விண்ணப்பத்தை தேவரீர் பத்திரிகையில் அவச்யம் பிரசுரம் செய்யவேண்டும். அதில் தேவரீருக்கு அநபிமதமானதிருந்தால் தேவரீர் எவ்வளவும் பிரசுரம் செய்து கொள்ளலாம். அதைப்பற்றி அடியேனுக்கு ஆக்ஷேபமோ வருத்தமோ ஒன்று

யில்லை. மத்யஸ்தர்களின் அபிப்ராயங்களை தேவரீர் அபேக்ஷித்தது உண்மையான ஹ்ருதய சுத்தியோடிருந்தால் அடியேனுடையவிண்ணப்பத்தை ஒரு அக்ஷரமும் மாற்றாமல் அப்படியே பிரசுரம் செய்யவேண்டியது யுக்தம்.

மற்ற விஷயங்களில் அடியேனுக்கு அவ்வளவு நோக்கமில்லை. தத்வத்ரயவ்யாக்யான ஸ்ரீஸூக்தியை தேவரீர் அத்யந்தம் விபரீதார்த்தமாக்கி ப்ரசுரம் செய்திருப்பது ஆசார்ய ஸ்ரீஸூக்திக்கு மஹத்தான த்ரோஹமென்று சொல்ல வேடிண்யதாயிருக்கிறது. இதன் பிரதியும் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபாதிகாரிகளுக்கு அனுப்பியிருக்கிறேன்.

இதி—ராமாநுஜதாஸன்

(அம்ருதூர்—ஜமீன்தார்)

## ஸ்ரீ. உ. வே. ஸ்ரீரங்கம் பெரிய நம்பி க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி—

(நஞ்சன்கூடு ஸமீபம்.)

## கழலையென்னும் அக்ரஹாரத்தில் நின்றும் விடுத்த ஸ்ரீமுகம்.

**4—6—49**

ஷோடசாத்யாயியென்கிற புத்தகம் வந்து சேர்ந்துபார்வையிட்டேன். அந்த வக்கீல் ஸ்வாமி இப்படிப்பட்ட வழியில் பிரவேசிப்பாரென்று நான் நினைத்திருக்கவில்லை. P. B. A. ஸ்வாமியென்று ஒரு அஷ்டோத்தரசதம் ஆவ்ருத்தி அவர்திருக்கையால் எழுதியிருப்பதால் அவரை மஹாஸுக்ருதியென்றே மதிக்கவேண்டும். திருச்சந்த விருத்தத்தில் திருமழிசைப்பிரான் "வைது நின்னைவல்லவாபழித்தவர்க்கும்" என்றாரம்பித்து அருளிச் செய்திருக்கிற பாசுரம் அந்த வக்கீலுக்கு மிகவும் பொருத்தமாயிருக்கிறதென்று பலர் அபிப்ராயப்பட்டார்கள். ஸ்வாமிமூலமாக மேன்மேலும் அபூர்வமான அத்புத விஷயங்கள் வெளிவருவதற்கு மஹான்கள் எதிர்பார்த்திருப்பார்கள்; எது எப்படியானாலும் தத்வத்ரய வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளில் அவர் செய்திருக்கிற அபார்த்தம் அங்கங்கே காலக்ஷேபபரர்களாக எழுந்தருளியிருக்கின்ற ஸகலஸ்வாமிகளாலும் அவச்யம் ஆக்ஷேபிக்கப்படுமென்பதில் ஸந்தேஹமில்லை. ஆனால் அந்த நிந்தனைக்களஞ்சியத்தை பொறுமையுடன் பார்க்கவும் பொருள்படுத்தி யெழுதவும் முன்வருவாரார்?.......தாஸன்-பெரிய நம்பி க்ருஷ்ணமாசார்யன்.

## ஸ்ரீ. உ. வே. திருக்கோட்டியூர்.

## பண்டித. ஸ்ரீரங்கராமாநுஜாசார்ய ஸ்வாமியின் ஸ்ரீமுகம்.

ஷோடசாத்யாயியிலுள்ள விஷயங்கள்யாவும் அப்ராமாணிகங்களென்பதை ஒவ்வொருவரும் எளிதாகத் தெரிந்துகொள்வார்களானாலும் எடுத்துக்காட்டுவது அவசயமென்று தோன்றி இத்துடன் அனுப்பியிருக்கிற வியாஸத்தை ஸ்ரீராமாநுஜனில் வெளியிடவேணுமென்று பிரார்த்திக்கிறேன்.

[கார்யதர்சியின் குறிப்பு:—பத்ரிகையில் போதுமான அவகாசமில்லாமையால் ஷெ வியாஸம் வெளியிடப்பட வில்லையென்பதற்கு அந்த ஸ்வாமியின் க்ஷமையைவேண்டுகிறோம்.]

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# முப்பத்திரண்டு மொழிமாலை.

(ப்ர—அ.)

மன்னு மணவாள மாமுனிவன் மாமலர்த்தாள்
என்னுடைய நற்செல்வ மென்றிசையும்—துன்னுபுக
ழாரியர்கள் தாளை யனவரத மேத்துதலாங்
காரியமே நந்தமக்குக் கண்.

முப்பத்திரண்டு மொழிமாலை யென்றிட்டுச்
செப்பஞ் செழிக்கச் சிறந்துரைக்கேன்—துப்புடையார்
கண்ணாரக் கண்டுகந்துங் காதாரக் கேட்டுகந்தும்
திண்ணார வோர்வார் தெரிந்து.

1. ஒன்றுபேசினாலு மெழுதினாலும் அது உலகம் உகந்து ஏற்கும்படியும் நீடூழி நின்று புகழ்பெறும்படியும் அமையவேணும். மானிடர்க்குப் பரஸ்பரம் மாச்சர்யம் மீதூர்ந்து நிந்தைகளைப் பொழிந்துகொள்ளுதல் இவ்விருள்தருமா ஞானத்திற்கு மிகவு மேற்ற இயல்பாம். அப்படிப்பட்ட நிந்தை மலிவிந்தைகளைப் பத்திரிகைகளிலும் புத்தகங்களிலும் பரவவிடுவதனால் சில பாமரர்கள் களிக்கலாமத்தனை. பண்டிதர்களும் பெரியாரும் மிகவுமருவருக்கும்படியான அத்தகைய நிந்தைகளுக்கு அடியேன்பால் ஈஷத்தும் எதிரொலி தோன்றாதபடிக்கு பகவத்பாகவத க்ருபாகடாக்ஷத்தைப் பிரார்த்திக்கின்றேன்.

2. அடியேனை நோக்கிப் பொய்யனென்றும் வஞ்சகனென்றும் இனைய ஸத்கார ஸூக்திகளைப் பெரியார் எவ்வளவு அநுக்ரஹித்தாலும் அதில் இறையும் வெருப்போ வெகுளியோ விளையாது. ஸ்ரீராம ப்ராவண்யமே வடிவெடுத்த பரதாழ்வான் விஷயத்தில் குஹப்பெருமாளும் பரத்வாஜமுனிவரும் இளைய பெருமாளும் பேசினவை ஸ்ரீராமாயண ப்ரஸித்தம். அவற்றால் அப்பரதனுடைய புகழ்ப் பெருமைக்கு என்ன மாசு வந்திட்டது. * தாமேவ இக்ஷ்வாகு நாதஸ்ய பரதஸ்ய கதாம் குரு * என்று சக்ரவர்த்தி திருமகனார் இடைவிடாது வாய்வெருவும்படியன்றோ அமைந்தது அவன்றன் பெரும்புகழ்.

3. பரந்த ரஹஸ்ய மருளிச்செய்த ஆசிரியரின் திருநாமத்தை மணவாளமாமுனிகளின் திவ்ய ஸூக்திகளைக்கொண்டு நிஷ்கர்ஷிக்கவேண்டிய தொன்றே நல்லார்க்குற்ற நற்பணி. 1. மாமுனிகளுக்கு முற்பட்ட ஆசிரியர்களின் திருவாக்கு, 2. பிற்பட்டவர்களின் திருவாக்கு, 3. மாமுனிகளின் திருவாக்கு—என மூன்றுவகுப்பாக்கி முதலிரண்டு வகுப்புகளைத் தள்ளி மூன்றாவது வகுப்பொன்றையே நாம் முக்கியமாகக் கொண்டோம்; இதற்குக் காரணமும் விரியவுரைத்தோம் பண்டே; மீண்டும் சிறிது நினைப்பூட்டுகிறோம்; சிறியவாச்சான்பிள்ளை தோன்றாதகாலத்தில் (பெரிய) என்னும் விசேஷணத்திற்கு விசேஷ ப்ரயோஜனமில்லாமையாலே முற்பட்டவர்கள் ஆச்சாபிள்ளையென்றே சொல்லிப் போந்தாலும் எழுதிப்போந்தாலும் அதனால் விவாதாஸ்பத விஷயத்தில் ஒரு நிர்ணயம் பெற இயலாது. பிற்பட்டவர்கள் இருள் துயக்குமயக்குகளில் நம்மோடொத்தவர்களே யாதலால் அன்னவர்களது வாக்குக்களைக்கொண்டும் நாம் ஒரு நிஷ்கர்ஷம் பெற வழியில்லை. இப்படியன்றிக்கே மணவாளமாமுனிகளின் திருவாக்கு எவ்விதமான ஸந்தேஹ விபர்யயங்களுக்கும் ஈஷத்தும் ஆஸ்பதமன்றிக்கே தெள்ளறிவை யூட்டத் தோன்றியதாதலால் ப்ராக்ருத விஷயத்தில் அஃதொன்றே நமக்குத் தஞ்சம்.

4. 'பரந்த ரஹஸ்யம் ஆச்சான்பிள்ளை யருளிச்செய்ததே யன்றிப் பெரியவாச்சான் பிள்ளையருளிச் செய்ததன்று என்பதை அடியேன் பலபல சான்றுகளால் தெரிந்துகொண்டேனாயினும் அவற்றுள் ஒன்றேயொன்றுதான் தலைமைபெற்றுளது. அதைத்தான் அஷ்டாத்யாயிக்கு ஆருயிராக அடியே னெடுத்துக் காட்டியுமிருப்பது. மற்றவற்றில் விசாரங்களை அடியோடு மறந்திட்டு இஃதொன்றில் மாத்திரம் முந்துற விசாரம் செய்வோம். இதில் அடியேன் மருள்கொண்டவனென்று மத்யஸ்தர்களான மஹநீயர்கள் கூறிவிடுவரேல், வேறு பல ப்ரமாணங்கள் அடியேனுக்கு எவ்வளவு ஸாதகங்களா யிருந்தாலும் அவற்றை யெடுத்துப் பேசுவது தவிர்ந்து கைகூப்பி நிற்பேனென்பது திண்ணம். மணவாளமாமுனிகளின் திவ்ய க்ரந்தங்களைத் திருவரங்கம் பெரியகோயில் ஸ்ரீபுல்லிபுத்தூர் வானமாமலை ஆழ்வார் திருநகரி திருவாலி திருநகரி முதலான திவ்யதேசங்களில் அந்நாள்தொடங்கி இந்நாள் வரையில் ஸத்ஸம்ப்ரதாய பரம்பரையாக ப்ரவசநம் செய்துபோரும் பெரியார் பலர் எழுந்தருளியிருக்கின்றார்களன்றோ. அவர்கள் பரந்த ரஹஸ்யத்தைப் பற்றின விசாரத்தில் சிறிதும் ப்ரவேசிக்கவேண்டா; அடியே னெடுத்துக்காட்டும் மணவாளமாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்தி யொன்றைப் பெரியார்கள் எங்ஙனே நிர்வஹித்துப் போருவது என்பதொன்றிலேயே அவர்கள் கருத்தைச் செலுத்துக.

5. தத்வத்ரயத்தில் அசித்ப்ரகரணத்தில் "ஸ்பர்சதந்மாத்ரை தொடக்கமான" இத்யாதி சூர்ணைக்கு மணவாளமாமுனிகளின் வியாக்கியானம் மிகவிரிவானது. அங்குப் பிள்ளைலோகாசர்யர் (மூலத்தில்) சிலவிஷயங்கள் அவச்யம் அருளிச்செய்யவேண்டியிருந்தும் ஸம்க்ஷேபமாக அருளிச் செய்கிற க்ரந்தமாகையாலே அருளிச்செய்யாது விட்டிட்டா ரென்று மாமுனிகள் முடிக்கிறார். அங்கு அவச்யமருளிச் செய்யவேண்டிய விஷயங்கள் எவை என்பதை மாமுனிகள்தாமே விரிவாகக் காட்டியருளுகிறார். (அதையிங்குச் சிறிது விவரிக்கிறேன்.) பூதாதியென்று சொல்லப்படுகிற தாமஸாஹங்காரத்தில்நின்றும் சப்ததந்மாத்ரை பிறக்கும்; இதில்நின்றும் ஆகாசமும் ஸ்பர்சதந்மாத்ரையும் பிறக்கும்; இதில்நின்றும் வாயுவும் ரூபதந்மாத்ரையும் பிறக்கும்; இதில்நின்றும் தேஜஸ்ஸூம் ரஸதந்மாத்ரையும் பிறக்கும்; இதில் நின்றும் அப்பும் கந்ததந்மாத்ரையும் பிறக்கும்; இதில் நின்றும் ப்ருதிவி பிறக்கும்—என்று முந்துற வொருவிதமாக உத்பத்திக்ரமத்தையருளிச் செய்து, உடனே "ஸ்பர்சதந்மாத்ரை தொடக்கமான நாலு தந்மாத்ரைகளும் ஆகாசந் தொடக்கமான நாலு பூதங்களுக்கும் கார்யமாய் வாயுதொடக்கமான நாலுபூதங்களுக்கும் காரணமாயிருக்குமென்றுஞ் சொல்லுவர்கள்" என்று பக்ஷாந்தர மொன்றையும் அருளிச்செய்துவைத்தார் (மூலத்தில்) பிள்ளைலோகாசார்யர்.

6. இங்கு முக்கியமாக ஒருவிஷயம் சொல்லப்பட வேண்டும்; அதாவது—கார்யோத்பாதகங்களான தத்வங்களானவை தம்தம் காரண வஸ்துக்களினால் ஆவரணம் பெற்றே உத்பாதநம் செய்கின்றன என்பது சொல்லப்படவேண்டும். த்வக்கு இல்லாத பீஜத்திற்கு உத்பாதநசக்தி (அங்குரசக்தி) யில்லாதாப்போலே ஸ்வஸ்வகாரணாவரணமற்ற தத்வங்கள் உத்பாதநம் செய்யமாட்டா என்பது சாஸ்த்ரங்களின் கொள்கை.

7. இதை மணவாளமாமுனிகள் ப்ரமாண விசேஷங்களைக் கொண்டு நிரூபித்தருளி, முடிவில் "இது தத்வத்ரய விவரணத்தில் ஆச்சான் பிள்ளையருளிச்செய்த க்ரமம்" என்று அருளிச் செய்து, உடனே "இங்ஙனன்றிக்கே தத்வநிரூபணத்திலே ஜீயரருளிச் செய்ததொரு க்ரமமுண்டு" என்று தொடங்கி விரிவாக வொருக்ரமத்தை யெடுத்துக்காட்டியருளி, இவ்விரண்டு க்ரமங்களுக்கும் அந்யோந்ய விரோதமில்லை யென்பதையும் உபபாதித்தருளினர்.

8. பிறகு நிகமனஞ் செய்தருளுமிடத்து, ஆச்சான் பிள்ளை தத்வத்ரயவிவரணத்தில் தந்மாத்ரத்துக்கு ஆவரணம் சொன்னாப்போலே அதன்விசேஷத்துக்கும் ஆவரணம் சொல்லியிருக்கவேண்டும்; ஆனாலும் அதுவும் சொல்லப்பட்டதாகவே கொள்ளவேணும். அப்படி-

கொள்ளப்படாவிடில் உத்பத்தியே ஸங்கதமாகாதன்றோ—ஆகையால் இரண்டுங் கொள்ள வேணும்—என்று ஒருவிஷயம் முடித்தருளினர்.

9. இதற்குமேல் வாதிகேஸரி ஜீயருடைய தத்வ நிரூபண க்ரந்தத்தில் இப்படி ஒன்றை உபலக்ஷண மர்யாதயா கொள்ளவேண்டாமல் இரண்டும் வ்யக்தமாகவே சொல்லப்பட்டிருப்பதாகத் தெரிவித்தருளி, ஆனாலும் அவருடைய திருவாக்கில் விசேஷத்தினுடைய உத்பத்திக்கு முன்னே தந்மாத்ரத்துக்கு ஆவரணம் கொள்ளவேணும்—என்றருளிச் செய்தார். ஆக, ஆச்சான் பிள்ளை க்ரந்தத்தையும் வாதிகேஸரி க்ரந்தத்தையுங்கொண்டு மாமுனிகள் நிகமனஞ் செய்தருளினது பூததந்மாத்ரஸ்ருஷ்டி சொல்லுகிற விந்த ஸ்தலத்தில் ஆவரணக்ரமமும் சொல்லியே யாகவேணுமென்று.

10. ஆனால் பிள்ளை லோகாசார்யர் மூலத்தில் ஆவரணக்ரம ப்ரஸ்தாவமே செய்தருளவில்லை. இது அநபேக்ஷிதமாகையாலே அருளிச் செய்யப்படவில்லை யென்று சிலர் எண்ணிவிடக்கூடுமென்று கருதிய மாமுனிகள் "இப்படி பூததந்மாத்ரஸ்ருஷ்டி சொல்லுகிறவிடத்திலே ஆவரணக்ரமம் வக்தவ்யமாயிருக்கச் செய்தேயும் அருளிச்செய்யா தொழிந்தது அபேக்ஷிதமல்லாமையன்று; ஸங்கோசேந உத்பத்திக்ரமத்தையருளிச் செய்தாரித்தனை" என்றெழுதியருளினர். சொல்லவேண்டியது அவச்யமாயிருந்தும் ஸங்க்ரஹருசியாலே சொல்லாது விட்டிட்டாரென்றபடி.

அதற்கடுத்த வாக்கியம்—

"பெரிய வாச்சான் பிள்ளையும் இப்படியிறே யருளிச்செய்தது" என்பதாம்.

ஸங்க்ரஹேண உத்பத்திக்ரமத்தைச் சொல்லுகையினாலேயே ஆவரணக்ரமத்தைச் சொல்லாது விட்ட பிள்ளைலோகாசாரியர்போலவே பெரிய வாச்சான் பிள்ளையும் அதைச் சொல்லாது விட்டிருக்கின்றார் என்பதே இதற்குப் பொருள். வேறுவகையான பொருள் ஸர்வாத்மநா அஸம்பாவிதம்.

11. இங்குப் பிறர் சொல்லும் பொருள் யாதெனில், கீழே ஆச்சான் பிள்ளை யென்கிற சொல்லினால் குறிக்கொள்ளப்பட்ட ஆசிரியரேதான் முடிவில் பெரியவாச்சான் பிள்ளை யென்ற சொல்லால் விளக்கப்பட்டாரென்று. இது ஒரு விதத்திலும் பொருந்தக் கூடியதன்று. ஆவரணக்ரமத்தைச் சொல்லியிருப்பவராக நன்கு நிரூபிக்கப் பட்ட ஆச்சான் பிள்ளை யானவர் தத்ப்ரஸ்தாவமும் செய்தருளாத பிள்ளை லோகாசார்யரோடு எப்படி ஸாம்யம் பெற முடியும்? இந்த ஸாம்யம் நெஞ்சினும் நினைக்கமுடியாததன்றோ.

12. ஆச்சான் பிள்ளை ஆவரணக்ரமத்தின் ஒரு பாகத்தைச் சொன்னாரேயொழிய மற்றொருபாகத்தைச் சொல்லவில்லை யென்பது தெளிவாக விளங்குகிறது என்று இதை உபஷ்டம்பகமாகக் கொண்டு பிறர் எழுதுவது சாஸ்த்ரஜ்ஞ ஸரணிக்குச் சேராது. சாஸ்த்ர வாஸநை யில்லாதவர்கள் இதை அவகாஹித்துக் கொள்வதுமரிது. முன்னே மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி எங்ஙனே யுள்ளதென்று பார்க்கவேணும்; "(ஆச்சான் பிள்ளை) தந்மாத்ரத்துக்கு ஆவரணம் சொன்னதுபோலே தத்விசேஷத்துக்கு ஆவரணம் சொல்லிற்றில்லையே யாகிலும் அது உபலக்ஷணமாமித்தனை;.........இரண்டுங் கொள்ள வேணும்" என்று மாமுனிகள் அருளிச் செய்துள்ளார். "உபலக்ஷணமாமித்தனை" என்றதன் தேறுதலை சாஸ்த்ரஜ்ஞர்களே யன்றோ அறியமுடியும்.

13. 'ஆச்சான் பிள்ளை மற்றொரு பாகத்தையும் சொல்லாது விட்டவரல்லர்; சொல்லியே யுள்ளார்' என்பதன்றோ மாமுனிகளின் முடிவு. இவ்விதமான முடிவு பிள்ளை லோகாசார்யருடைய மூல ஸ்ரீஸூக்தி விஷயத்தில் கிடையாதே. சொல்லவேண்டிய ஆவரணக்ரமத்தை அடியோடு ப்ரஸ்தாவியாத லோகாசார்யருக்கும் அதைப் பூர்த்தியாகச் சொன்னவராகவே நிகமிக்கப் பெற்ற ஆச்சான் பிள்ளைக்கும் ஸாம்யம் ஒரு படியாலும்

பொருந்தாது. "பிள்ளை லோகாசார்யர் ஸங்கோசேந உத்பத்தி க்ரமத்தையருளிச் செய்தாரித்தனை" என்றிவ்விதமாகப் பங்க்தியை மாமுனிகள் அருளாமல் "உபலக்ஷணமர்யாதயா இங்கு ஆவரணமும் சொல்லிற்றாகக் கொள்ளக்கடவது" என்று இங்ஙனே பங்க்தியருளிச் செய்திருந்தாராகில் ஆச்சான் பிள்ளைக்கும் லோகாசார்யர்க்கும் இவ்விஷயத்தில் ஒருவாறு ஸாம்யம் நெஞ்சிலாவது நினைக்கமுடியும். அப்போதும் "பெரியவாச்சான் பிள்ளையு மிப்படியிறே அருளிச் செய்தது" என்கிற வாக்யத்திற்கு ஸமந்வய லேசமுங் கிடையாது பிறர் கூறும் பொருளில். கீழ்ச்சொன்ன ஆச்சான் பிள்ளையைப் பற்றியே இது சொல்வதானால் அவருடைய நிரூபண விஸ்தாரத்தைக் கீழே விவரித்திருக்கவே வேண்டா.

14. தவிரவும், பெரியவாச்சான் பிள்ளையையே ஆச்சான் பிள்ளையென்று மாமுனிகள் திருவுள்ளம்பற்றி ஸ்ரீஸூக்திஸாதிப்பவராகில், பெரியவாச்சான் பிள்ளை என்கிற ஸவிசேஷநிர்தேசத்தை முந்துறமுன்னம் செய்துவிட்டு ஆச்சான்பிள்ளையென்கிற நிர்விசேஷநிர்தேசத்தைப் பின்னே பின்னே செய்தருளியிருப்பர். இதுதான் க்ராந்திகஸரணி. அதே ப்ரகரணத்தில் நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டருடைய ஸ்ரீஸூக்திகளைப்பலகால் உதாஹரித்தருளாநின்ற மாமுனிகள் முதன்முதலான நிர்தேசத்தில் 'நடுவில் திருவீதிப்பிள்ளைபட்டர்' என்று ஸவிசேஷமாக எழுதியருளி, பின்னே பின்னே 'பட்டர்' என்று மாத்திரம் நிர்விசேஷமாக எழுதியுள்ளபடியைப் பல்காலுங்காணா நின்றோம்.

15. க்ராந்திகஸரணியென்று கொண்டு தெரிவிக்கப்படும் இவ்விஷயம் நிற்க. அர்த்தஸ்திதியை நோக்கிச் சொல்லுமிடத்தும் "பெரியவாச்சான் பிள்ளையுமிப்படியிறே யருளிச் செய்தது" என்கிற பங்க்திக்குப் பிறர் ஏறிடும் பொருள் சிறிதும் ஏறமாட்டாததன்றோ. ஏறும், ஏறாது என்பதை நிர்ணயிக்கவேண்டிய பொறுப்பு வாதிப்ரதிவாதிகளுடையதன்று, மத்யஸ்தமஹநீயர்களுடையதேயாகும். உபய வேதாந்தக்ரந்த காலக்ஷேபப்ரவணர்களான ப்ரவீணர்களுக்கே இந்தப்பொறுப்பை நாம்விட்டிருக்கிறோம். அப்படிப்பட்ட மஹநீயர்கள் ஒருமிடறாகத் தம் தம் திருவுள்ளத்தை வெளியிட்டாயிற்று. இனி, "மாமுனிகளின் திருவுள்ளம் இப்படியன்று, நீ கொண்டது பிசகு" என்று நிரூபிக்கவல்ல பெரியாருளரேல் நன்கு நிரூபித்தருளி அடியேனைத்தெளிவிக்கலாம். இந்தப் பொறுப்பு மத்யஸ்தமஹநீயர்களுக்கே விடப்பட்டிருக்கின்றதென்பதை புந: புநரபி விஜ்ஞாபயே.

16. இதற்குமேல், பெரியவாச்சான் பிள்ளை அப்படி ஸம்க்ஷேபேண அருளிச் செய்தது இன்னவிடத்தில் என்பதை மாமுனிகள் காட்டியருளாதது குறையன்றோ என்கிறவர்தம் தோன்றியுள்ளது. கேண்மின்; அவ்விடத்திலேயே (103) "ஸ்பர்சதந்மாத்ரை தொடக்கமான" என்று தொடங்கியுள்ள சூர்ணையின் வியாக்கியானத்தில் "...ஸ்ரீபராசரபகவானுக்கு விவக்ஷிதமென்று நினைத்து வ்யாக்யாதாக்கள் வ்யாக்யானம் பண்ணிவைக்கையாலே" என்று மாமுனிகளின் ஸூக்தி காண்கிறோம். எந்த வ்யாக்யாதா என்பதை தெளிவிக்கவில்லையே யென்று குறைகூறலாகுமே? தெரிந்தவர்களுக்கு எளிதாகத் தெரியக்கூடியதேயென்கிற திருவுள்ளத்தினால் மாமுனிகளும் விசதப்படுத்தியருளாமல் விட்டிடு மிடங்களுமுண்டே.

17. முமுக்ஷுப்படியில் "அத்ர பகவத்ஸேநாபதிமிச்ரர் வாக்யம்" என்ற விடத்து வியாக்கியானத்தில், அந்த ஸேநாபதிஜீயர் யார்? எக்காலத்திலிருந்தவர்? யார் திருவடிகளில் ஆச்ரயித்தவர்? அந்த வாக்கியம் யாரை நோக்கி எப்போது அவர் ஸாதித்தது? என்று இவற்றை விசதீகரித்தருளவில்லையே யென்று குறைநினைக்கவொண்ணுமோ? தத்வத்ரயத்திலேயே (70) "*ஆச்ரயாதந்யதோ வ்ருத்தே: ஆச்ரயேண ஸமந்வயாத், த்ரவ்யத்வஞ்ச குணத்வஞ்ச ஜ்ஞாநஸ்யைவோபபத்யதே* என்றிறே ஆளவந்தார் அருளிச்செய்தது" என்றருளியுள்ளார் மாமுனிகள். இன்ன க்ரந்தத்திலென்பதைக் காட்டியருளவில்லையே யென்று குறை கூறவொண்ணுமோ?

அன்றியும், "கட்டிப்பொன்போலே சேஷத்வம், பணிப்பொன் போலே பாரதந்த்ர்யம் என்னக்கடவதிறே!" என்றும், "ஆனந்தம் அவன் ப்ரீதியைத் தளிரெழுப்ப என்கிறபடியே" என்றும் இப்படி சில ஸ்ரீஸூக்திகளும் மாமுனிகளின் வியாக்கியானங்களில் காண்கின்றன; இந்த மேற்கோள்கள் எவ்விடத்திலுள்ளன வென்பது விசதவாக் சிகாமணிகளால் விசதீகரிக்கப்பட வில்லையேயென்று குறை கூறவொண்ணுமோ? அக்காலத்திலிருந்த ப்ரஸித்தி விசேஷங்களைப்பற்ற விசதீகரணம் வேண்டாவென்று விடுத்தருள்வதுண்டு என்பதுதான்.நன்கு தெளிவாகிறது.

19. மிகமுக்கியமாக வொன்று தெரிவிப்போமிங்கு; மாமுனிகள் பட்டருடைய ஸ்ரீஸூக்திகளையெடுத்தருளிச் செய்யுமிடங்களிலெல்லாம் "என்று பட்டருளிச் செய்தார்" "என்று பட்டராலுமருளிச் செய்யப்பட்டது" என்று அருள்வதே இயல்பு. ஓரிடத்தில் மாத்திரம் "பெரியபட்டர் அருளிச்செய்தார்" என்கிறார். எங்கே யென்னில், ஸ்ரீவசந பூஷணத்தில் ஐந்தாவது சூர்ணையின் வியாக்கியானத்தில்—"பெரியபட்டரும் ஸ்ரீஸஹஸ்ர நாமபாஷ்யோபோத்காதத்திலே * ஸ்ரீராமாயணவத் மஹாபாரதம் சரணம் * என்றருளிச் செய்தாரிறே" என்றுள்ளது காணலாம்; மற்றவிடங்களிலெல்லாம் பட்டர் பட்ட ரென்றே அருளிச் செய்து போந்தவர் இவ்வோரிடத்தில் மாத்திரம் பெரியபட்டர் என்றருளிச் செய்வானேன்? என்று சங்கை தோன்றினால், அங்கேயே முன் பங்க்தியை ஸேவித்தால் செவ்வனே தெளிவு பிறக்கும். "இதுவும் நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டர்தாமே யருளிச் செய்தார்" என்பது அந்த முன்னே யுள்ள ஸ்ரீஸூக்தி; உடனே ஸ்ரீபராசர பட்டருடைய ஸ்ரீஸூக்தியையும் எடுத்துக்காட்ட நேர்ந்தது; முன்னே காட்டிய பட்டரைக் காட்டிலும் வேறுபாடு தோன்றுவதற்காகவே "பெரிய பட்டரும்" என்று அருளிச் செயலாயிற்று. இது தவிர வேறு காரணம் கிடையாது.

20. மணவாள மாமுனிகளருளிச் செய்த நான்கு ரஹஸ்யங்களின் வியாக்கியானங்களுக்குள் பெரியவாச்சான் பிள்ளை யென்று ப்ரயோகம் செய்தருளியுள்ள விடம் ஒன்றே யொன்றுதான். அதுதான் கீழே நிரூபித்தவிடம். அங்கு, ஆச்சான் பிள்ளை ஆச்சான் பிள்ளை யென்றே முன்னே அருளிச் செய்து வந்தபடியாலே அந்த ஆசிரியரைக் காட்டிலும் வேறுபாடு தெரிவிப்பதற்காகவே உடனே பெரிய வாச்சான் பிள்ளை யென்று பணித்தது. இவ்வளவு ஆராய்ச்சியின்றிக்கே, 'முன்னே ஆச்சான் பிள்ளை யென்று நிர்தேசித்தவரையேதான் பின்னே பெரிய வாச்சான் பிள்ளை யென்று நிர்தேசித்தது' என்று கூறுவது ஸதாசார்ய ஸேவாரஸிகர்களுக்கு ஏற்குமோ வென்பதை விவேகிகள் விமர்சிப்பது.

21. இந்த சர்ச்சையிலீடுபட்டபோது, மணவாளமாமுனிகளின் வியாக்கியானக்ரந்தங்களில் ஆளவந்தார் முதலான நம் பூர்வாசார்யர்களின் ப்ரஸ்தாவமும் அவர்களது பொன்னே போன்ற மொழிகளின் உதாஹரணமுமுள்ள விடங்களை யாவரும் கண்ணாடிபோல் காண்பதற்கு ஓர் உபாயம் செய்யவேணுமென்று தோன்றியதனால் மாமுனிவன் மேற்கோள் விளக்கு என்கிற சிறுநூலைச் சேகரித்து வெளியிட்டுள்ளேன். அதனையுற்றுநோக்குவார்க்குப் பல விஷயங்கள் தெரியவரும். இப்படியே மற்றும்சில ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளிலிருந்தும் மேற்கோள் விளக்கு அடைவே வெளியிடப்பெறும்.

22. அதுநிற்க. இப்போது வெளியிடப்பட்டுள்ள மாமுனிவன் மேற்கோள் விளக்கில் மநுஷ்யஸஹஜமான ப்ரமாதவசத்தினால் ஒன்றிரண்டு மேற்கோள் விடுபட்டிருக்கவுங் கூடும். கூடுமானவரை விடுபடாதபடி சேகரித்திருப்பதாகவே எண்ணம். பெரியார்கள் மாமுனிகளின் வியாக்கியான க்ரந்தங்களிலேயே நேராக அவகாஹித்துப் பரிசீலித்து, மாமுனிகள் ஆச்சான் பிள்ளையையும் பெரியவாச்சான் பிள்ளையையும் ஒரேவ்யக்தியாகத் திருவுள்ளம் பற்றியிருக்கிறாரா? தனிப்பட்ட வ்யக்தித்வயமாகத் திருவுள்ளம்பற்றி யிருக்கிறாரா? என்பதை விவேகித்து வெளியிடுவது உலகுக்கு மஹோபகாரமாகும்.

23. பரந்தரஹஸ்யம் ஆச்சான் பிள்ளை யருளியதேயல்லது பெரியவாச்சான் பிள்ளை யருளியதன்று என்கிற ஸ்தாபனத்திற்கு உயிராகக் கொண்ட விஷயத்தை அடியேன் விசதமாக நிரூபித்தாயிற்று. இஃதொன்றையே பரமப்ரமாணமாகக் கொண்டிருக்கின்றேன். மற்றுள்ள ப்ரமாணங்களைப்பற்றி விசாரமேவேண்டா. இஃதொன்றில் பெரியார்களின் திருவுள்ளம் வேறாயிருந்தால் வெளிவரட்டும்.

24. பெரியவாச்சான் பிள்ளை யென்கிற சொல்லைச் சிலர் பெரியவாய்ச் சாண்பிள்ளை என்று கூறி, ‘சாண்பிள்ளையாயிருந்தாலும் வாய்பெரியர்’ என்று அர்த்தமுரைப் பதுண்டு; ஆனால் அது பண்டித கோஷ்டிகளில் பரிசுபெறாது; சிலபாமரர்க்கு ரஸ்யமாயிருக்கும். அப்பொருளையே நெஞ்சிற்கொண்ட பிறர், தத்வத்ரய வியாக்கியானத்தில் மாமுனிகள் ஆச்சான் பிள்ளையென்றே முன்னம் சொல்லிவந்து முடிவில் பெரியவாச்சான் பிள்ளையென்றது—‘விரிவாகச் சொல்லுகிற அவரே சுருங்கச் சொன்னபோது லோகாசார்யர் சுருங்கச் சொன்னது அதிசயமன்று என்று காட்டுவதையே உள்ளுறையாகக் கொண்டது, இது மஹாமேதாவிகளுக்கே ஸூக்ஷ்மமாக அறியக் கூடிய விசேஷார்த்தம்’ என்று கூறுவதன் பொருத்தத்தை ப்ராஜ்ஞர்களே பார்க்கவேணும். பெரிய என்கிறசொல் எதில் விசேஷணமாக அந்வயிக்கிறது? என்று கேட்டால் ஸமஞ்ஜஸமாக விடை கூறவேணுமே. அந்த விசேஷணமானது, திருமலை பெரியஜீயர்’ என்பதுபோன்ற வ்யவஹாரங்களிற்போல் வ்யக்தியின் வேறுபாட்டை மாத்திரமே காட்டவந்ததேயல்லது வேறு எந்தவிசேஷத்தையும் காட்டவந்ததன்று. பட்டர் காலத்திலே நஞ்சீயர் பெரியஜீயரென்று வழங்கப்பட்டுவந்தாரென்று தேசிகனுடைய ரஹஸ்யத்ரயஸாரத்தினால் அறிகிறோம். மணவாளமாமுனிகள் பெரியஜீயரென்று வழங்கப்பட்டுவந்தாரென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். இந்த வ்யபதேசங்களில் பெரிய என்பது சிறியவொரு ஜீயரை வ்யாவர்த்திக்கு மத்தனையேயல்லது வேறோர் பொருட்டன்று. ஆகவே இங்குப் பிறருடைய விசேஷார்த்த கல்பநம் ஆகாசதாண்டவமென்று முடிந்தது.

25. அஷ்டாத்யாயியில் (பாரா 8-ல்) “உபதேசரத்தினமாலையில் திருநாம ப்ரஸித்தி தெரிவதற்காக மூன்றுபாசுரங்களில் பெரிய வாச்சான்பிள்ளை யென்று பெயரையிட்டுக் கூறினாராயினும் மற்றவிடங்களில்......” என்று அடியேனெழுதியிருப்பதனைக் கண்ட பிறர்—“உபதேசரத்தினமாலையில் திருநாமப்ரஸித்தி தெரிவதற்காக ஓரிடத்தில் பெயரைச் சொல்லிக் குறித்தால் போதுமே; மற்ற இரண்டிடங்களிலும் பூர்வர்களென்றே மாமுனிகள் ஏன் குறிக்கவில்லை யென்று கேட்டால் என்னபதில் சொல்லமுடியும்?” என்கிறார்கள். இது உபதேசரத்தினமாலையைக் கனவிலுங் காணாதாருடைய அட்டஹாஸமன்றோ. அங்குள்ள மூன்று பாசுரங்களிலும் பெரியவாச்சான் பிள்ளையென்றே பெயரிட்டுச் சொல்லியாகவேண்டிய நிர்ப்பந்தமிருப்பதை நிரூபிக்கக் கேண்மின்; * பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான்பிள்ளை தெள்ளார் வடக்குத் திருவீதிப்பிள்ளை, மணவாளயோகி திருவாய்மொழியைக் காத்த குணவாளரென்று நெஞ்சேகூறு.” என்பது முதலிடம். திருவாய்மொழிக்கு வியாக்கியானஞ் செய்தருளின ஆசிரியர்களை யெல்லாம் பெயரிட்டுக்காட்டுகிற பாசுரமிதுவாகையால் இதில் பெரியவாச்சான்பிள்ளை யென்றே சொல்லியாகவேண்டிற்று.

26 பிறகு, * நம்பிள்ளை தம்முடைய நல்லருளாலேவியிடப், பின் பெரியவாச்சான் பிள்ளையதனால்......இருபத்தினாலாயிரம் * என்றது இரண்டாவதிடம். இன்ன பெயருள்ள வியாக்கியானத்தை இயற்றினாரென்று விவரித்துவருகிற ப்ரகரணமாகையாலே இங்கும் பெரியவாச்சான்பிள்ளை யென்றே சொல்லியாகவேண்டிற்று. இங்கு ‘பூர்வர்கள் இட்டது இருபத்தினாலாயிரம்’ என்றால் அந்வயிக்குமோ?

27. பிறகு * பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்குந் தெரிய வியாக்கியைகள் செய்வால் * என்பது மூன்றாவதான இடம். திருவாய்மொழி தவிர்ந்த மற்ற மூவாயிரத்திற்கும் பெரியவாச்சான்பிள்ளை தாம் வியாக்கியானம் செய்தருளினாரென்று சொல்லுகிற விடமிதுவாதலால் இங்கும் பெரியவாச்சான்பிள்ளையென்றே சொல்லியாகவேண்டிற்று.

